உ
சிவமயம்



# திருக்களர் ஆண்டவர் வரலாறு




ஆசிரியர் :
ஏ. கே. செட்டியார்

வெளியீடு :
சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார்
காரைக்குடி.

1-1-1974

உ
சிவமயம்

24-1

# திருக்களர் ஆண்டவர் வரலாறு

ஆசிரியர் :
ஏ. கே. செட்டியார்




வெளியீடு :
சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார்
காரைக்குடி.
1-1-1974

உ

சிவமயம்

## நன்றியும் வணக்கமும்

இச் சிறு நூலுக்கு வாழ்த்துரை அருளிய கோவிலூர் மடாதிபதி தவத்திரு இராமநாத ஞான தேசிக சுவாமிகள் அவர்களுக்கும்,

முன்னுரை வழங்கிய "தமிழ்க் கடல்" ஸ்ரீ ராய. சொக்கலிங்கம் அவர்களுக்கும்,

1972 'கல்கி' தீபாவளி மலரில் காஞ்சி ஆசார்ய சுவாமிகள் திருக்களர் ஆண்டவரைப் பற்றி எழுதிய சில பகுதிகளை இந் நூலில் சேர்த்துக் கொள்ள அன்புடன் அனுமதி தந்த 'கல்கி' அதிபர் ஸ்ரீ தி. சதாசிவம் அவர்களுக்கும்,

இந் நூலைத் தம் செலவில் அழகாக வெளியிட்டு, இலவசமாக வழங்குவதற்குத் தாமே வலிய முன்வந்த காரைக்குடி ஸ்ரீ சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார் அவர்களுக்கும்,

திருக்களர் ஆண்டவரின் திருவடிகளுக்கும்,

இதனைக் கூட்டுவித்த எல்லாம்வல்ல இறைவனின் எல்லையற்ற அருளுக்கும் நன்றியும் வணக்கமும்.

ஏ. கே. செட்டியார்

உ

சிவமயம்



# நூல்முகம்

## தமிழ்க்கடல். சிவமணி. இராய. சொ.

கோவிலூர் மடாலயம், காரைக்குடி நகரத்தின் எல்லையிலிருந்து மேற்கே ஒருகல் தொலைவில் காரைக்குடி மதுரை நெடுஞ்சாலையில் செல்லுகின்றவர்களை "இங்கே வாருங்கள்" என அழைக்கும் இரண்டு சிறந்த கோபுர வாயிலுக்குள் அமைந்திருப்பது. இற்றைக்கு 180 ஆண்டுகட்கு முன்னர் காரைக்குடி நகரில் பிறந்தருளிய கோவிலூர் ஆண்டவர் எனப் பாராட்டப் பெறும் தவத்திரு முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகளை முதற்குருவாகக் கொண்டது இம்மடாலயம். இம்மடாலயத்தைத் தோற்றுவித்து, சிவம் பரப்பிய பெரியார் அப் பெருந்தகையே. அவ் ஆண்டவரைச் சிறப்பித்துப் பின்வரும் பாடலைப் பாடினர் ஒரு புலவர்.

மடம்உண்டோ? சிவாலயங்கள் மிகுதி உண்டோ?
　　வாசிட்டம் படிப்பதுண்டோ? மனத்துள் ஞானத்
திடம்உண்டோ? நால்வர்தமிழ்ப் படிப்பார் உண்டோ?
　　திவ்வியமாம் உதாரமுதல் குணங்கள் உண்டோ?
விடம்உண்டோன் அடியர்குழாம் மிகுதி உண்டோ?
　　மெய்யறம்,சத் திரம்,விரைப்பூங் காவும்உண்டோ?
வடகயிலைக்கு இறைவன்எனும் முத்து ராம
　　வள்ளல்திருக் கழனிநகர் வாரா முன்னம்.

எனவே முத்துராமவள்ளல் கழனிநகரில் அடி எடுத்து வைப்பதற்குமுன் மேற்குறித்த சிறப்புக்கள் எவையும் இல்லை. கழனிநகர் என்பது கோவிலூரைக் குறிக்கும்.

கோவிலூர் மடம் எல்லா ஊரிலும் உள்ள நாட்டுக் கோட்டை நகரத்தார் அனைவருக்கும் உரிமை உடையது; அத்துவிதம் என்னும் வேதாந்தக் கொள்கை உடையது; நகரத்தார் வகுப்பில் பிறந்த துறவிதான் மடாதிபதியாக வரும் உரிமை உடையவர் என்ற மரபை உடையது. இன்று அம்மடத்தின் அதிபதியாக விளங்குகின்றவர்கள் தவத்திரு இராமநாத ஞானதேசிக சுவாமிகள். இவர்கள் இம் மடத்தின் ஒன்பதாவது அதிபராவர்.

இந்நூல், இம் மடாலயத்தில் ஐந்தாவது பட்டமாக எழுந்தருளி இருந்த *திருக்களர் ஆண்டவர்* என்னும் சிறப்புப் பெற்ற தவத்திரு *வீரசேகர ஞான தேசிக* ***சுவாமிகளின்*** வரலாறு. கோவிலூர் மடத்தை யாரும் வியக்கும் வண்ணம் செய்த சிறப்பு இப் பெரியாருக்கு உரியது. மடாலயத்தில் பல பெரிய கட்டிடங்கள் இப் பெரியார் காலத்திலேயே அமைக்கப் பெற்றன. கோவிலூரிலுள்ள சிவன் கோவில் திருப்பணியைச் சிறப்பாக, கலைநுட்பங்கள் மல்கச்செய்து முடித்து அறுபத்தைந்து ஆண்டுகட்குமுன் இவர்கள் குடநீராட்டு விழாச் செய்தார்கள். கோவிலூரைக் கலைமலிந்த ஓர் மாதிரிச் சிற்றூர் ஆக ஆக்கியது இவர்களே.

சுவாமிகள் இணையற்ற செயல்திறன் உடையவர்கள்; எதையும் திறமையாகவும் சிறப்பாகவும் செய்வார்கள்; கோவிலூர் மடத்துக்கும் சிவன் கோவிலுக்கும் நகரத்தார்ப் பெருமக்களிடம் ஏராளமான பணம் எளிதில் திரட்டினார்கள். இவர்கள் கேட்கும் போது மறுத்து உரைப்பவர் இலர் என்று சொல்லலாம். தனவணிக நாட்டில் இவர்கட்கு அவ்வளவு செல்வாக்கு இருந்தது. சுவாமிகளை *ராஜரிஷி* என்றே சொல்வதுண்டு.

தம் இறுதிக் காலத்தில் சோழ நாட்டிலுள்ள திருக்களர் என்ற தேவாரத் தலத்திற்குச் சென்று, நகரத்தாரிடம் பல இலட்சம் ரூபாய் பெற்று, அங்குள்ள சிவன் கோயிலுக்குத் திருப்பணி செய்து, சிறப்பாகக் குடநீராட்டு விழா முடித்து திருக்களரிலேயே தங்கி, இறைவனுக்குச் சிறப்பாகத் திருவிழா நடாத்தி, வைகாசி விசாகத்தில் திருக்களரில் எழுந்தருளி உள்ள அமுதவல்லி உடனுய களர்முளை நாதர் திருத்தேரில் திருஉலா வந்தபோது தேருக்கு முன்னர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் இறைவனோடு இரண்டறக் கலந்து பரிபூரணம் எய்தினார்கள்.

ஐம்பது ஆண்டுகட்குமுன் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் திருக்களர் ஆண்டவரின் மாணுக்கராகிய வடமொழியும் தென்தமிழும் ஆங்கிலமும் ஹிந்தியும் கற்றறிந்த சொல்லாற்றல் வாய்ந்த தவத்திரு. வீர. சுப்பைய சுவாமிகள் சொற்பெருக்காற்றியபோது, காரைக்குடியில் இருந்த கம்பராமாயண விரைவுரையாளராகிய மும்மொழிப் புலமைவாய்ந்த மோ. வே. கோவிந்தராச ஐயங்காரவர்கள்,

''தருக்கம்உணர்ந்து அத்துவித சமயநெறி
தழுவி,நலம் சகத்தோர்க்கு ஈயும்
திருக்களர்ஞா ஞசிரியன் திருவடியார்
சுப்பைய ஞானி மேலோன்''

என்று பாடிய பாடற் பகுதி நினைவுக்கு வருகின்றது.

கோவிலூர் மடாலயத்தின் ஐந்தாவது குருவாக எழுந்தருளி இருந்த வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் திருக்களர்த் தலத்தில் சமாதி ஆனார்கள். இவர்களுடைய சமாதிக் கோயில் திருக்களரில் சிவன் கோயிலுக்குப் பக்கத்தில் இருக்கிறது. இச்சமாதிக் கோயிலும் திருக்களரிலுள்ள மடாலயமும் கோவிலூர் ஆதீனத்துக்கு உட்பட்டவை.

வீரசேகர ஞான தேசிகரின் வரலாற்றுச் சுருக்கத்தை என் மிகப் பழைய நண்பர் ஏ. கே. செட்டியார் எழுதி இருக்கின்றார். தன வணிக மரபில் தோன்றியவருள் அன்பர் ஏ. கே. செட்டியார் குறிப்பிடத் தக்க ஒருவர். அவர் தேசப் பற்றும், தெய்வ பக்தியும், நேர்மையும் உடையவர்; அந்தநாள் முதல் விடாது கதர்க் கட்டிக் கொண்டுவரும் கிறுக்கர்களாகிய எங்கள் கூட்டத்தில் சேர்ந்தவர். அவருக்குப் பாராட்டு.

இந்நூலை வெளியிட்டு அன்பளிப்பாக வழங்குபவர் என் மாணுக்கர், என்னிடம் பேரன்பு கொண்டவர், கோவிலூர்ப் பரம்பரைக்கு வழிவழி அடியவர், காரைக்குடி திரு. சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார். அவருக்கு வாழ்த்து.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய கோவிலூர் மடாதிபதி தவத்திரு.இராமநாத ஞானதேசிக சுவாமிகட்கு வணக்கம்.

*காரைக்குடி*
*11—12—73*

**இராய. சொ**

# கோவிலூர் மரபு

## கோவிலூர் மடாதிபதி

## ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்களின் வாழ்த்து

இற்றைக்கு ஏறக்குறைய நூற்று எண்பது ஆண்டுகட்கு முன்னர் ''செட்டிமார் நாட்டின்'' திலகமெனத் திகழும் காரைக்குடி நகரத்தில் தனவணிகப் பெருமரபின் தவப் பயனுக அவதரித்தார் ''கோவிலூர் ஆண்டவர்'' எனக் குவலயம் போற்றும் ஸ்ரீ முத்திராமலிங்க ஞான தேசிகர். இவர் கருவிலே திருவுடையாராக இருந்தமையின் தமது பாலப் பருவமான பதின்மூன்ரும் ஆண்டளவிலேயே சிக்கல் பொருள் வைத்த சேரியில் சென்று ஞாஞசிரியரை அடைந்து, முறைப்படி குருமுகமாக ஞான நூல்களைக் கற்று, பதினறு வயது பூர்த்தியாகு முன்பே ஞாஞநுபூதிச் செல்வராகப் பல அற்புதச் செயல்கள் நிகழ்த்தலானுர். அக்காலம் ''நாட்டுக் கோட்டை நகரத்தார்'' என வழங்கும் தனவணிகப் பெருமக்கள் கடல் கடந்து சென்று தங்கள் வாணிபத்தை வளமுறப் பெருக்கிய காலமாகும். ''திரை கட லோடியும் திரவியம்'' சேர்ப்பதிலேயே கருத் தூன்றிய நகரத்தார் சமூகம், தேடிச் சென்று திருத்தலங் களில் திருப்பணிகள் செய்யவும், அறக்கட்டளைகள் அமைக்கவும், என்றும் அழியா வரலாற்றுப் புகழ் மிகுந்து வளமுடன் வாழவும் வழிவகுத்த சிறப்பு, ஸ்ரீ சற்குரு முத்தி ராமலிங்க ஞானதேசிகருக்கு உண்டு.

ஸ்ரீ முத்திராமலிங்க ஞான வள்ளல் காரைக்குடியை அடுத்த கோவிலூரில் திருக்கோவில் கொண்டு விளங்கும் அம்பிகை திருநெல்லையிடம் அளவிலா ஈடுபாடு கொண் டிருந்தார். அடிக்கடி அம்பிகை திருநெல்லையின் அருட் காட்சி காணப்பெறும் பெரும்பேறு அவர் பெற்றிருந்தார். அம்பிகை அருள்பாலித்த வண்ணம் ஆலயத்தை நகரத் தார்களின் உதவி கொண்டு பெரும் அளவில் கலைத் திறன் பொதிந்த கருங்கல் திருப்பணியாகச் செய்யத் திருவுளம் கொண்டார்.

ஞானப் பேரொளியாக விளங்கும் சற்குரு முத்திராம லிங்க வள்ளலின் அருட்செயல்கள் நாடெங்கினும் பரவலா யிற்று. பூர்வ ஜன்ம புண்ணிய வசத்தால் ஞானவேட்கை மிக்க நல்லறிஞர் பலரும் நாடிவந்து ஞான நூல் கற்பா ராயினர். தம்மைச் சரணாக வந்தடைந்த பக்குவர்கட்கு "அஞ்சலென அடயம் கொடுத்தருளி" பாரமார்த்திகப் பேருண்மைகளைப் பலவாருகத் தெளிய உணர்த்திப் பரமானந்தப் பேற்றை அருள் புரிந்தார் சற்குரு முத்திராமலிங்கர்.

நாளுக்கு நாள் பெருகிவரும் ஜாதி, இன வேறுபாடற்ற அடியார் குழாம் உணவுக்கும் உடைக்கும் இருக்கைக்கும் அலைந்து திரியாமல் அவர்கள் ஓரிடத்தில் தங்கி அமைதி யாகத் தத்துவ விசாரம் செய்யவும், ஜபம், தபம், தியானம் முதலான ஆத்மசாதனைகள்செய்துவரவும், திருமடம் ஒன்று அமைக்கத் திருவுளம் கொண்டு, அதற்கான ஏற்பாடுகள் செய்த வேளையில் அம்பிகை திருநெல்லையே காட்சி தந்து அருள் பிரசாதம் வழங்கியருளினள்.

வடமொழியில் உள்ள வேதாந்த சித்தாந்த உண்மை களை வடமொழிப் பயிற்சி யில்லாத தமிழ்ப் பெருமக்களும் உணர்ந்து, உய்யும் நெறி நிற்கும் வகையில் தமிழில் "நாநாஜீவ வாதக் கட்டளை" தொடங்கி "ஞாநவாசிட் டம்" ஈருன பதினறு நூல்கள் கிரமப் பாடமாக வகுத்தது கோவிலூர் திருமடாலயத்தின் சிறப்பான பணியாகும். ஞானப் பேரொளியாக விளங்கிய ஸ்ரீ ஆண்டவரை அடைக் கலமாக அடைந்து, குருபரன் குற்றேவல் செய்து ஞான அநுபூதி பெற்ற அடியார்கள் அனந்தம். அவர்களில் பலர் ஆங்காங்கு தமக்குற்ற தலங்களில் திருமடம் அமைத்துக் கொண்டு கோவிலூர் மரபினை விளங்கச் செய்து வருகின்றனர். கோவிலூர் மரபின் வழிவழியாக

அமைந்துள்ள திருமடங்கள் தமிழகத்தில் சுமார் 60க்கு மேல் உள்ளன.

ஸ்ரீ ஆண்டவரின் வியத்தகு மாண்பினை,

"கார்கொண்ட புயல்வண்ணன் மலரயன் வருந்தியும்
காணுதபெரு வாழ்வெனும்
கறைமிடற் றிறைராச கட்கபர மேசுரன்
கருணையுருவோ டமர்ந்து,
கனவெழில்கொள் மணிமாட நிலவுசமி வனமெனக்
கழறுமுயர் பதியில்வாசன்
கணிதமறு சீடர்தம(து) அகவிருள் துரத்தவரு
கருதரிய ஞானதபனன்
போர்கொண்ட காமக் குரோதலோ பாதியம்
புகல்குற்றம் நீங்குபுனிதன்
பொறையறி(வு)அடக்கம்அருள் முதலநற் குணமொடு
பொருந்திவளர் உற்றமுதல்வன்
புவனம்மூன் றினும்இவன் புகழ்சென் றிடற்கிடம்
போதா(து)எ னச்சிறந்தோன்
பொருவிலா(து) உயர்சுத்த வேதாந்த சாத்திரம்
போதம்மிக்(கு) உள்ளநிபுணன்
பேர்கொண்ட நிர்மல சமாதிசாட் சாத்கார
பிரதாப மிகுசிரேஷ்டன்
பெருமைநிறை தருமுத்து ராமலிங் கக்குரு"

என்று சைவப்பெரியார், யாழ்ப்பாணத்து நல்லூர் உயர்திரு ஆறுமுக நாவலர் அவர்கள் போற்றிப் பாராட்டுவார்.

குறிப்பு : "இராச கட்க பரமேசுரன்" என்பது கோவிலூரில் திருக்கோயில் கொண்டு விளங்கும் இறைவன் திருநாமம்.

"சமிவனம்" என்பது கோவிலூர்.

ஸ்ரீ ஆண்டவரின் ஞான வாரிஸாக வழி வழி வந்த சற்குரு மூர்த்திகளில் ஐந்தாவது ஞானகுரவராகக் குரு ஸ்தானம் வகித்தவர் இந் நூலின் நாயகராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிகப் பெருமான் ஆவர்.

தவராஜகராகவும் ஞானச் செல்வராகவும் விளங்கிய வீரசேகர சற்குருவின் பிரபாவங்களை இந் நூல் சுருக்கமாக விளக்கம் செய்கின்றது.

இதற்கு முன் "ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள் புராணம்", "திருக்களர் ஆண்டவர் சரித்திரம்," "ஸ்ரீ வீரசேகர ஞான தேசிகர் புகழ் உரை ரஸ மஞ்சரி" என்ற நூல்கள் வெளிவந்துள்ளன. ஆயினும் இந் நூல் மிக எளிய நடையில் பாலர்களும் படித்துப் பயன்பெறுமாறு அமைந்துள்ளது பாராட்டுதற் குரியது.

இதனை அச்சிட்டு வெளியிடுபவர் கோவிலூர் மடாலயத்தில் பரம்பரைத் தொடர்பு உள்ளவரும், சற்குரு கைங்கர்யத்தில் அன்பும் ஆர்வமும் நிறைந்தவரும், நற்குண சீலருமான காரைக்குடி ஸ்ரீ சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார் ஆவர். அவருக்கு உளம்கனிந்த வாழ்த்து உரியதாகும்.

அன்னாரின் பயன் கருதாப் பணியினை நல்ல முறையில் நிறைவேற்றுவதில் துணை புரிந்த அன்பர் ஸ்ரீ ஏ. கே. செட்டியாருக்கும், "தமிழ்க் கடல்", "வண்கவி வள்ளல்" ஸ்ரீ இராய. சொ. வுக்கும் எமது பாராட்டு உரியதாகும்.

*இராமநாத ஞாந தேசிகர்.*

உ
*சிவமயம்*

திருக்களர் ஆண்டவர் என்னும்
கோவிலூர் ஆதீனம் 5-ஆவது குரு முதல்வர்

# ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் வரலாறு

புதுவயல் என்னும் ஊரில் தனவணிகர் மரபில் அருணாசலம் செட்டியாருக்கும் உமையாள் ஆச்சிக்கும் ஒரே தவப்புதல்வராக வீரசேகரர் கீலக (1848) ஆவணி 12ந்தேதி அவதரித்தார். குல வழக்கப்படி மூன்று வயதில் புதுமை நடைபெற்றது.

அடுத்த சில மாதங்களில் தந்தை காலமானார்.

ஐந்தாவது ஆண்டில் பள்ளியில் வைத்தார்கள்.

பத்தாவது ஆண்டில் திரைகடலோடித் திரவியம் சேர்க்க வெளிநாடு சென்றார்.

வெளிநாட்டில் தொழில் செய்தபோது திடீரென்று பொருளிலும், அதைத் தேடும் வழியிலும் அருவருப்புற்றுத் தாய்நாடு திரும்பினார்.

புதுவயலில் தரும சிந்தனையும், நல்லொழுக்கமும் வாய்க்கப்பெற்ற வீரப்பையா என்னும் தனவணிகப் பெரியாரின் தொடர்பு ஏற்பட்டது.

அதே ஊரில் வாழ்ந்த மற்றொரு தனவணிகச் சீலரான அழகப்பையா ஒரு பெரிய வேதாந்தி. அவர் வீரசேகரர்

பால் அன்பு கொண்டு "பட்டினத்துப் பிள்ளையார் பாடல்கள்" என்ற நூலைக் கொடுத்துப் படிக்கச்செய்தார். பின்னர் தத்துவராய சுவாமிகளின் அடங்கன் முறையின் ஒரு பகுதியாகிய "அஜ்ஞவதைப் பரணி"யையும் படிக்கச் செய்தார்.

வீரசேகரர் இவ்விரு பெரியார்களின் சத் சங்கத்தால் பிரமசாரியாக இருந்து ஆன்ம வளர்ச்சி பெற்றுர்.

பதினுருவது வயதில் இவருக்குத் திருமணம் செய்ய இவர் தாய் பெரிதும் முயன்றுர். ஆனுல் வீரசேகரர் மறுத்துவிட்டார்.

தாம் சந்நியாசம் பெற விரும்புவதாக வீரசேகரர் அழகப்பையாவிடம் கூறினுர்.

அதற்கு அழகப்பையா, "நான் அடிமையாய் இருந்த கோவிலூரிலுள்ள பரமாதி பரம்பரைக்கோர் நிலைக்கள மாகிய வேதாந்த மடத்திற்குச் செல்" என்றுர்.

உடனே கோவிலூர் நோக்கிப் புறப்பட்டார் வீரசேகரர்.

கோவிலூரில் இரண்டாம் முறை பாடம் சொல்லி வந்த பொன்னம்பல ஞான தேசிகரைத் தரிசித்தார்.

வந்த காரியம் யாதென வினவ, "பெரியாரை வழிபட்டுய்ய வந்தனன்" என்றுர்.

"இச் சிறுவன் ஓர் உச்ச பத மடைவான்" என்ற திருவுளம் கொண்டு, அம் மடாலயத்தில் சிறியாரைச் சேர்க்கிறதில்லை என்றுள்ள நியமத்தைத் தழுவாமலே, இவரையும் அவ்வடியவருள் சேர்த்தார் பொன்னம்பல ஞான தேசிகர்.

சிறுவரைத் தம்முடன் அழைத்துச் சென்று, மடாலயத் தலைவரும், "கருணாநிதி" என்று பலரும் போற்றிய வருமான சிதம்பர ஞான தேசிகர் பாதம் பணியச் செய்து, சிறுவரை அடிமை கொண்டு ஆளவேண்டும் என்று பிரார்த்தித்தார்.

பின்னர் "உபநிடத சாரமாகிய தத்துவங்களைக் கூறும் "நா நா ஜீவ வாதக் கட்டளை" என்னும் அம் மடாலய மரபின் தொடக்க நூலைப் போதித் தருளினர்.

வீரசேகரர் தம் பந்துக்களை விலக்கினர். பின்னர் சிக்கல் என்னும் க்ஷேத்திரத்தை அடைந்து, பொருள் வைத்த சேரி என்னும் இடத்திலுள்ள உகந்த லிங்க ஞான தேசிகர் சந்நிதானத்தை அடைந்தார்.

அங்கு, தலைமை பெற்றிருந்த சட்டையப்ப சுவாமிகள் என்னும் பெரியாரிடத்து, துறவு முறைப்படி பிதிர்க்கடன் முதலியவற்றைக் கழித்து, மந்திரோபதேசத்துடன் சுப தினத்தில் காவியாடை ஏற்று, இலிங்க சந்நியாசம் செய்து கொண்டார்.

பின்னர் கால்நடையாக வழியில் பிச்சை ஏற்றுக் கோவிலூரை அடைந்தார்.

கோவிலூரில் ஆசிரியர்பால் முறையாக ஞானவாசிட்டம் வரை, பதினாறு நூல்களையும் பாடம் கேட்டார்.

ஆசிரியரின் ஆசி பெற்றுத் தலயாத்திரை மேற்கொண்டார். கால் நடையாகவே காளையார் கோவில் சென்று, தீர்த்தமாடித் தெருவில் கைப் பிச்சை ஏற்றுண்டு, பின்னர் பல தல வணக்கம்செய்து, சிதம்பரத்தை நோக்கி நடந்தார். நடராஜப் பெருமானைக் கண்டு ஆனந்தக் கூத்தாடினர்.

சிதம்பரத்திலுள்ள மௌன ஞான தேசிக மடாலயம் சென்று, அதில் ஒரு சிறு அறையில் தங்கி, தெருவில் பிச்சை ஏற்றுண்டு, இடையரு நிட்டையில் ஆழ்ந்தார். இவ்வண்ணம் 12 ஆண்டுகள் தவசீலராக விளங்கினர்.

ஒரு முறை திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்களைச் சென்று வணங்கி நிற்க, அவர் வேதாந்த முணர்த்தும் செய்யுளொன்று கூறுமாறு பணிக்க, "அற்ப முனக்கொன் றினிதாகி லதனுற் பிறப்பி லகப்பட்டாய்'' என்ற செய்யுளைக் கூறினர். சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் "அருமை, அருமை'' என்று பாராட்டி விபூதிப் பட்டுப்பையை வழங்கினர்.

இந் நிலையில் கோவிலூரில் முறையே மடாதிபதி களாக விளங்கிய கோவிலூர் ஆண்டவர் என்னும் ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர், துறவு ஆண்டவர் என்னும் ஸ்ரீ அருணாசல ஞான தேசிகர், கருணைநிதி என்னும் ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர், காரைக்குடி ஸ்ரீ ராம சாமி ஞானதேசிகர் ஆகியோர் பரிபூரண மடைந்திருந் தனர்.

கோவிலூர் ஆதீனம் குரு முதல்வரான ஸ்ரீ கோவிலூர் ஆண்டவர் அருளிய வாக்கின்படி காரைக்குடி ஸ்ரீ இராமசாமி ஞான தேசிகர், தமது நிரியாண தசையில் தமக்குப்பின் "வீரன் வருவான்'' என்று கூறித் தம் குறிப்பை உணர்த்தினர்.

பெரியஸ்வாமிகள் என்று போற்றப் பெற்ற ஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகள் அப்பொழுது சிதம்பரத்தில் இருந்தார். அவர் விஜய நகரத்தில் அகம்படியர் குலத்தில் உதித்து, சிதம்பரம் பெத்தாச்சி சுவாமி அவர்களிடம் சந்நியாசம் பெற்று, கைப் பிச்சை

ஏற்றுண்டு, கோவிலூர் ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் அவர்களிடம் வேதாந்த பாடம் கற்றவர்.

தம் ஞானசிரியர் கருணைநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் பரிபூரணமானதும், கோவிலூரை விட்டுப் புறப்பட்டு, தம் ஞானசிரியரின் பாதுகையையே ஆசிரியராகப் பாவித்துப் பலருக்கு வேதாந்தம் உபதேசித்து வந்தார்.

க ரைக்குடி ஸ்ரீ இராமசாமி ஞான தேசிகர் பரிபூரண மடைந்த செய்தி கேட்டதும், பொன்னம்பல சுவாமிகள், "இனிக் கோவிலூர் மடாலயத்தைப் பாதுகாக்கத் தக்கவர் வீரமா முனிவரைத் தவிர்த்து வேறு யாவருள்ளார்?'' என்றார்.

இதைக் கேட்ட வீரசேகர சுவாமிகள் தம் சந்நியாச வாழ்க்கைக்கு இம் மடாலயத் தலைமை இடையூருகவும், பொன் விலங்காகவும் இருக்கும் என்று அஞ்சினர்.

சிதம்பரத்திலேயே இருந்தால் தம்மைக் கட்டாயப் படுத்துவார்கள் என்று, பயந்தோடி வளவனூர் ஸ்ரீ சண்முக ஞான தேசிகர் மடாலயத்திற்குச் சென்று ஒளிந்து கொண்டார்.

வீரசேகரர் வளவனூரில் இருப்பதறிந்து சில அடியார் களையும், குமரப்பையா என்னும் தன வைசியப் பெரியா ரையும் அனுப்பி, வீரசேகரரைச் சிதம்பரத்துக்கு அழைத்து வர ஏற்பாடு செய்தார் பொன்னம்பல சுவாமிகள்.

''உலக விவகாரத்தில் ஊடாட என் மனம் எள்ளள வும் ஏற்கவில்லை. ஆதலின் என்னை விடுதலை செய்யக் கேட்டுக் கொள்கிறேன்'' என்று மன்றாடினர் வீரசேகரர்.

அதற்குப் பொன்னம்பல ஞான தேசிகர், ''உமது வார்த்தையோ ஒப்ப முடிந்த உண்மை. ஆனுல் நாம் கோவிலூர் ஆதீனத்தைக் கொண்டல்லவோ கடைத் தேறினேம். அதை நாம் பேணுது கைவிடின் நாம் கடைத் தேற நல்வழி கிட்டலும் அரிதன்றே?'' என்று கூறி, வீர சேகரரைச் சம்மதிக்கச் செய்தார்.

பின்னர் இருவரும் தம் அடியார்களுடன் சிதம்பரத்தி லிருந்து புறப்பட்டுக் கோவிலூரை அடைந்தனர்.

பக்தர்கள் மனமகிழ ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் மடாலய குரு ஸ்தானத்தை ஏற்ருர்.

பொன்னம்பல சுவாமிகளும் கோவிலூரிலேயே தங்கி, இராமபிரானுக்கு இளைய பெருமாளைப் போல, உயிர்த் துணையாக விளங்கி வந்தார்.

ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் பட்டத்துக்கு வந்ததும், கோவிலூர் மடத்தில் பல அபிவிருத்திகள் செய் தார். கைலாசக் கொட்டகை. பிரம சபை, குருபூசைக் கட்டு, நெற்களஞ்சியம், புஷ்ப மண்டபம் முதலியன கட்டு வித்தார். ஊருணிக்குக் கற்படித் துறைகளைக் கட்டினுர். பல அடியார் வசிப்பதற்குத் தனித் தனி ஆசிரமங்களும் கட்டப் பெற்றன.

ஸ்ரீ சிருங்ககிரி சாரதா பீடாதிபதி ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்மபாரதி சுவாமிகள் இராமேசுவர யாத்தி ரையாக வந்த சமயத்தில் சாதுர்மாஸ்ய விரதத்திற்கு இராமநாதபுரத்தில் தங்கியிருந்தார்கள்.

ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள், வீரசேகர சுவாமி களிடம் ''ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி சுவாமிகளைக் கோவி லூருக்கு வழக்கம் போல அழைத்துவர வேண்டும்'' என்ருர்.

வீரசேகர சுவாமிகள் அதற்கிசைந்து, பொன்னம்பல சுவாமிகளையே அனுப்பி ஸ்ரீ சிருங்ககிரி சுவாமிகளை அழைத்து வரச் செய்தார்.

ஸ்ரீ சிருங்ககிரி சுவாமிகள் கோவிலூரில் ஒருமாத காலம் தங்கிய பொழுது, வீரசேகர சுவாமிகள் பொருளை அளவின்றிச் செலவிட்டுத் தக்க உபசரணைகள் செய்தார்.

''சிருங்ககிரியில் உள்ள சாரதாம்பாள் ஆலயத்தைக் கருங்கற் பணியாக ஆக்குவித்தல் உங்கள் கடமை'' என்று சிருங்ககிரி சுவாமிகள் கூறினர்.

அன்றே, வீரசேகர சுவாமிகள் நகரத்தார் வசிக்கும் ஊர்களுக்கெல்லாம் ஏவலரை அனுப்பி அவர்களை வர வழைத்து, ஒன்பது கோயில் நகரத்தாரிடம் ரூபாய் 30,000 வாங்கித் தாமே சிலகாலம் வைத்திருந்து, வட்டியும் அசலும் ரூபாய் 50,000 சேர்த்துச் சாரதாம்பாள் கோவில் கட்டும்படி சிருங்ககிரி மடத்தில் கொடுத்து, கோவிலைக் கருங்கற் பணியாகச் செய்து, கும்பாபிஷேகமும் சிறப்பாக முடிவுற்றது.

வீரசேகர சுவாமிகளைச் சரணடைந்த மாணவர் பலர். அவர்களுள் சிலரை இங்கே குறிக்கின்றேன்.

1. தொண்டை மண்டலத்தில் மண்டபப்பட்டு என்னும் கிராமத்தைச் சேர்ந்த வேங்கடாசல ரெட்டியார் என்னும் வேங்கட முனிவர்.

2. பாண்டிநாட்டில் எட்டையபுரத்தில் சித்தலக்கரை என்னும் ஊரில் நாயகர் வம்சத்திலுதித்த வெள்ளையப்ப சுவாமி என்னும் வெள்ளியங்கிரி முனிவர்.

3. தேனிபட்டி என்னும் கழநிவாசல் வைசிய நகரத்தின்கண் உதித்த தனவைசியராகிய அண்ணமலை

ஞான தேசிக சுவாமிகள். (வீரசேகர சுவாமிகளுக்குப் பிறகு, அவர்களது ஆக்ஞையின்படி அண்ணுமலை ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் மடத்திற்கு அதிபதியாக இருந்து வந்தார்).

**4.** கொங்கு நாட்டில், கோயம்புத்தூருக்கு அருகில் உள்ள வேட்டைக்காரன் புதூர் என்னும் கிராமத்தில் மருதாசலம் பிள்ளையின் குமாரராகத் தோன்றி, இளமையில் ஆங்கிலம் கற்று, வைத்தியராக அரிய பெரிய புகழுடன் விளங்கிய சுப்பையா ஞான தேசிக சுவாமிகள். இவர் ஆங்கிலம், இந்தி, சம்ஸ்க்ருதம், தமிழ் ஆகிய நான்கு மொழிகளிலும் வல்லுநர். இவருடைய சமாதி நிலையம் சென்னையில் பெரம்பூர் பாரெக்ஸ் ரோடில் ஸ்ரீ ஆனந்தாஸ்ரமம் என்று வழங்கி வருகிறது.

**5.** நாட்டரசன்கோட்டை என்னும் வைசிய நகரத்தில் மாத்தூர்க் கோவிலைச் சார்ந்த மெய்யப்ப செட்டியார் என்னும் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள். (இவர் சிக்கல், பொருள் வைத்த சேரி மடாலத்தின் அதிபதியாக விளங்கி, நகரத்தார் உதவி கொண்டு பெரும் பொருள் செலவில் சிவாலயப்பணி பூர்த்தி செய்தவர்).

**6.** கேரள தேசத்திலுதித்துக் கேரள பாஷை கற்று இன்னிசை உணர்ந்த தத்துவ ஞானியாகிய திருக்களர் நா. ஸ்வாமிகள் என்னும் நாராயண சுவாமிகள்.

7. தேவிகோட்டை என்னும் வைசிய நகரத்தின்கண் இராமசாமி செட்டியார் குமாரரும், பின்னர் திருப்பூவண மடாதிபதியாய் இருந்தவருமான காசிகாநந்த ஞானசார்ய சுவாமிகள்.

8. தேவிகோட்டை தனவைசியர் சுப்பிரமணியன் செட்டியார் குமாரரும், திருவண்ணமலை ஈசான்ய தேசிகர்

மடத்தில் தலைமை பூண்டு பின்னர் அண்ணமலை ஞான தேசிக சுவாமிகளுக்குப் பிறகு, கோவிலூர் மடாலயத் தலைமை ஏற்றவருமான மஹாதேவ ஞான தேசிக சுவாமிகள்.

9. வேதாரணியத்தில் அகம்படியர் குலத்தில் சாமித் தேவர் புதல்வரான வேத மொழி பெயர்ப்பு ஆசிரியர், வியாகரண பண்டிதர் சிவாநந்த சுவாமிகள். (இவர் வட மொழியில் உள்ள வேதங்களைத் தமிழில் மொழி பெயர்த்தவர்).

10. மதுரை பிரமானந்த ஸ்வாமிகள் மடாலயம் மடாதிபதி சோமசுந்தர ஸ்வாமிகள்.

11. பசுபதி கோவில் சிதம்பர ஸ்வாமிகள்.

12. மழபாடி சதாசிவ ஸ்வாமிகள்.

13. (ரிஷியூர்) வேப்பஞ்சேரி சூரவாளி சொக்கலிங்க ஸ்வாமிகள்.

14. திருவண்ணமலை சாத்தப்ப ஸ்வாமிகள்.

15. பஞ்சந்திக்குளம் வைத்தியலிங்க சுவாமிகள்.

16. சின்னமரெட்டிபட்டி அருணசல சுவாமிகள்.

17. கண்ணடிக்கார இராமசாமி சுவாமிகள்.

முதலிய எண்ணிறந்த துறவிகள் மாணக்கர்களாக இருந்தனர்.

காரைக்குடி வெங்கடாசலய்யா,
சுப்பிரமணிய அய்யா,
குட்டையையா,
குமரப்பையா,
மெய்யப்பையா,
மாணிக்கய்யா,
கோட்டையூர் அழகப்பையா,
தேனிபட்டி அடைக்கப்பையா,
திருவளர் சோலை கோவிந்தையா

முதலிய இல்லற அடியார்களும் இருந்தனர்.

கோவிலூரில் இருபத்தேழரை ஆண்டுகள் மடாதிபதி யாகத் திகழ்ந்தார் வீரசேகர சுவாமிகள்.

தம் காலத்தில் கோவிலூர் கொற்ற வாளீஸ்வரர் கோயிலைப் புதுப்பித்து, பல புதிய மண்டபங்களையும் கட்டி, சிறப்பாகக் கீலக ஆண்டில் கும்பாபிஷேகம் செய்தார்.

சிருங்ககிரி சங்கராச்சார்ய சுவாமிகள் கும்பாபி ஷேகத்துக்கு வந்து ஒரு மாதம் தங்கி, வீரசேகர சுவாமி களை ஐந்து சுலோகங்களால் வாழ்த்தி யருளினர்.

திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற திருக்களர் கோயில் க்ஷீண தசையில் இருப்பதாகவும், அதன் திருப்பணியை மேற்கொள்ளவேண்டும் என்றும், பூவனூர் இராசு முதலியார் என்னும் மெய்யடியார் வீரசேகர சுவாமிகளிடம் விண்ணப்பம் செய்துகொண்டார்.

வீரசேகர சுவாமிகள் அதற்கிசைந்து திருக்களர் சென்று, தம் திருக்கரங்களால் உளிகொண்டு கொத்தித் தச்சு வேலை ஆரம்பித்தருளினர்.

மூன்று ஆண்டுகளில், நான்கு லட்ச ரூபாய் செலவில் திருப்பணியை அற்புதமாகச் செய்து, கும்பாபிஷேகத்தை யும் சிறப்பாக நடத்தி வைத்தார்.

இவர் இயல்பாகவே கோபக்காரராக இருந்தார். இருந்தபோதிலும் ''காமம் ஆதிகள் வந்தாலும் கணத்தில் போம் மனத்தில் பற்ருர்'' என்றபடி விருப்பு வெறுப்பு அற்ற மெய்ஞ்ஞானியாகவே திகழ்ந்தார்.

இவருக்கு வாக்குச் சித்தியும் அமைந்திருந்தது. அதனுல் இவரிடம் நெருங்குபவர் மிக்க பயபக்தியுடனேயே நடந்துகொள்வர்.

இவரைத் துர்வாசமுனிவரின் அவதாரம் என்றும் சொல்வதுண்டு. திருக்களரில் துர்வாச முனிவருக்குக் கூத்தப்பெருமான் காட்சி அருளியதாகக் கொண்டாடப் பெறும் திருச்சந்நிதி முன்பாகவே இவர் கைவல்ய நிலே அடையப்பெற்றது, இதற்கு மிக்க பொருத்தமாக அமைந் துள்ளது.

திருக்களர் உற்சவத்தின் பத்தாவது தினமாகிய ரதோற்சவத்தில், வீரசேகர சுவாமிகள் தமது திருக்கரத் தால் தேர் வடத்தைப்பற்றியிழுத்தார்.

பின்னர் தம் மடாலயம் சென்று, சிறிது ஓய்வுகொண்டு தெற்கு வீதியில் ரதம் வந்து கொண்டிருக்கும்போது, மீண்டும் ரதத்திற்கு எதிரே வந்து, ஆனந்த பரவசராகி, ''ஹரஹர மகாதேவா'' என்று சொல்லிய வண்ணம், விரோதிகிருது (1911) வைகாசி 12ந் தேதி விசாக நக்ஷத் திரத்தன்று சச்சிதானந்தப் பேரொளியில் கலந்தார்.

அப்பொழுது சுவாமிகளுக்கு வயது அறுபத்து மூன்று.

அன்று ரதங்கள் நிலையடைந்ததும், ஏராளமான பக்தர்கள் வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் திரு மேனியை அலங்கரித்து, தனி ரதத்தில் வைத்து ஆலயத்தை வலம் வந்து சமாதி செய்தனர்.

பின்னர் கோவிலூர் மடாதிபதியாக வந்த அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள், திருக்களரில் வீரசேகர சுவாமிகளுக்கு ஆலய நிர்மாணம் செய்து கும்பாபிஷேகமும் நடத்தினர்.

வைகாசி மாதம் விசாகப் பெருநாளன்று நடைபெற்று வரும் திருக்களர் ஆண்டவர் என்னும் கோவிலூர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் குருபூஜையை மக்கள் ஆண்டுதோறும் பக்தி சிரத்தையுடன் சிறப்பாகக் கொண்டாடி நடத்தி வருகின்றனர்.

---

*ஜகத்குரு, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி*
*சங்கராச்சாரிய சுவாமிகள்*
*கல்கி 1972 தீபாவளி மலரில் எழுதியது*

''துர்வாஸர் மாதிரி'' என்றே சொல்லி ஜனங்கள் பயப்பட்டுக் கொண்டிருந்த சுவாமிகள் ஒருவர் சமீப காலத்தில் இருந்தார். சுமார் அறுபது எழுபது வருஷங் களுக்கு முன்னுல், அவர் செட்டி நாட்டில் கோயிலூரில் வசித்து வந்தார். அவருக்கு வீரப்ப சுவாமிகள் என்று பெயர். அவர் மிகவும் பெரியவர். பரமசிவனின் பரம பக்தர். மகா சுத்தமான வாழ்க்கை நடத்தியவர். இத்தனை நல்ல அம்சங்கள் இருந்தாலும், ரொம்பவும் முன்கோபி யாக இருந்தார். சட்டென்று கோபம் வந்து விடும். ''பிடி சாபம்'' என்று திட்டி விடுவார். அவர் சபித்தபடியே நடந்து விடும். அதனுல் அவரிடம் எல்லோருக்கும் மிகவும் பயம். நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களுக்கு அவரிடம் ஏக பயபக்தி. பக்தியை விட பயம் அதிகம் என்றும் சொல்லலாம். அவர் எது சொன்னுலும் மரியாதை காரணமாகப் பாதியும், பயம் காரணமாகப் பாதியுமாக அவர் சொன்னபடியே செய்துவிடுவார்கள்.

ஆசை தடுக்கப்பட்டால் கோபமாகிறது. வீரப்ப சுவாமிகளுக்கு என்ன ஆசை இருந்தது? அவருக்கு உத்தமமான ஆசையே இருந்தது. தமிழ் நாட்டில் உள்ள தேவாலயங்கள் எல்லாம் பூர்வத்தில் இருந்தது போல் சீரும் சிறப்புமாக இருக்க வேண்டும். இந்த நாடு முழுவதி லும் வேத வித்யை மங்காமல் பிரகாசிக்க வேண்டும் என்பதே அவரது ஆசை. ஆனபடியால் நகரத்தாரிடம் "இன்ன கோயிலுக்குத் திருப்பணி செய்யுங்கள்; இன்ன

ஊரில் வேத பாடசாலை வையுங்கள்'' என்று கட்டளை போடுவார். அவரிடம் அடங்கி நடந்துகொண்டிருந்த நகரத்தார் சமூகத்தினர் அவர் சொன்னவிதமே ஏராள மான ஆலயங்களுக்குத் திருப்பணி செய்தார்கள். வேத பாடசாலைகளை எங்கு பார்த்தாலும் வளர்த்தார்கள். க்ஷேத்திரங்களில் எல்லாம் தர்ம சத்திரங்களைக் கட்டி வைத்தார்கள்.

வீரப்ப சுவாமிகளின் கோபத்தினுல் நல்ல விளைவே உண்டாயிற்று. நாரதர் கலகம் செய்தாலும் நல்லதில் முடியும் என்கிறமாதிரி வீரப்ப சுவாமிகள் கோபித்துக் கொண்டதால் நாட்டுக்கே பெரிய நன்மை உண்டாயிற்று.

(வீரப்ப சுவாமிகளிடம் இருந்த பயத்தால்தான் நகரத்தார் இந்தத் தெய்வீகத் தொண்டும், வைதிகத் தொண்டும் செய்தார்கள் என்று நான் சொல்வதாக அர்த்தமில்லை.)

அவர்களுக்கு இயற்கையாகவே நம் மதத்தில் நல்ல அபிமானமும், தாராளமனமும் உண்டு. பழைய ராஜாக்கள் மறைந்து வெள்ளைக்கார ஆட்சி ஏற்பட்ட பிறகு, பழைய ராஜாக்கள் செய்து வந்த வேத போஷணையையும், கோயில் திருப்பணியையும் நடத்திக் கொடுத்தவர்கள் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்தான். இந்தப் பணியில் அவர்களுக்குத் தூண்டு கோலாக இருந்தவர்கள், கோயிலூர் வீரப்ப ஸ்வாமிகள்.




---

